2 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண் எம். 8798

கதிர் 13 மதுரை 18—4—75 வெள்ளி மலர்: 66

## வெளியிடாதது எத்தனையோ?

தென் அமெரிக்காவின் வைரக் கம்பெனியோடு கூட்டு உடன்பாடு கொள்வது பற்றி சோசலிஸ்ட் கட்சி உறுப்பினர் மதுலிமாயி எச்சரித்தபோது வர்த்தக அமைச்சர் அப்படி கூட்டு ஏற்படுத்துவது பற்றி பிரச்னையே இல்லை என்றார்.

ஆனல், பின்பு அதே அமைச்சர் அப்படி கூட்டு உடன்பாட்டிற்கான திட்டம் வகுக்கப்பட்டுக் கொண்டிருப்பதாக ஒப்புக் கொண்டார்.

—பேட்ரியாட், மார்ச். 27

## தாழ்த்தப்பட்டோர் வீட்டைக் கொளுத்திய காட்டுமிராண்டிகள்

பேஸ்டி, (உ. பி.) ஏப். 14—

பிரதமர் இந்திரா காந்தியின் மாநிலமான உத்திரப்பிரதேசத்தில் பேரி என்னும் கிராமத்தில் உயர் ஜாதி நிலப்பிரபுத்துவ மிருகங்கள், கூலி உயர்வு கோரி தங்கள் வயலில் வேலை செய்ய மறுத்த தாழ்த்தப்பட்டோர் 4 பேரை படுகாயப்படுத்தினர். 30 குடும்பங்களின் குடிசைகளையும் கொளுத்தி விட்டனர்.

### காங்கிரஸ் ஆட்சியாளர்களின் அடக்குமுறைகளை முறியடிக்க

# போராட்ட சக்திகளை பலப்படுத்துவோம்

## திருவாரூர் நிதியளிப்புக் கூட்டத்தில்

## தோழர் இ. எம். எஸ். பேச்சு

திருவாரூர், ஏப். 15—

**காங்கிரஸ் ஆட்சியாளர்களின் ஆளும் வர்க்கங்களின் தாக்குதல்களை எதிர்த்து முறியடிக்க, போராட்ட சக்திகளை பலப்படுத்துவதும், உழைப்பாளி மக்களையும், விவசாயிகள் விவசாயத் தொழிலாளர்கள் மாதர்கள் முதலிய அனைத்துப் பகுதியினரையும் அணி திரட்டுவதும் நமது கடமையாகும் என்று இங்கு நடந்த மாபெரும் பொதுக்கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ உறுப்பினர் தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் குறிப்பிட்டார்.**



கட்சி—தீக்கதிர் வளர்ச்சி நிதிக்காக கடந்த 10-ந் தேதியன்று இங்கு நடந்த இப்பொதுக் கூட்டத்தில் 25 ஆயிரத்துக்கு மேற்பட்ட மக்கள் திரண்டிருந்தனர்.

கட்சி தீக்கதிர் வளர்ச்சி நிதிக்காக— இம்மாவட்டத்தின் சார்பில் மொத்தம் ஒரு இலட்சத்து 62 ஆயிரத்து 821 ரூபாயும் 54 காசுகளும் கொண்ட நிதி முடிப்பை தோழர் இ. எம். எஸ். ஸிடம், மாவட்டச் செயலாளர் தோழர் கே. ஆர். ஞானசம்பந்தன் வழங்கினர்,

நிதியைப் பெற்றுக்கொண்ட தோழர் இ எம் எஸ். நன்றி தெரிவித்துப் பேசிய பின்பு இன்றைய அரசியல் நிலை குறித்து விளக்கினர். அவர் பேசியதாவது:—

### ஜனநாயக விரோத நடவடிக்கை

அவசர நிலையை ரத்துச் செய்யும்படி ஆட்சியாளர்களை வற்புறுத்த கடந்த 6-ந் தேதி நாடு முழுவதும் நடந்த இயக்கம் உங்களுக்குத் தெரியும். இந்தக் குறிப்பிட்ட பிரச்னையில் எந்தெந்த கட்சிகள் ஒன்றுபடத் தயாராக உள்ளனவோ அவற்றுடனெல்லாம் —'எந்தவொரு தனி நபருடனும் சேர்ந்து இயக்கம் நடத்தத் தயார் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அறிவித்தது.

ஏனெனில் இன்று ஜனநாயகத்துக்கும், பிரஜா உரிமைகளுக்கும் அந்த அளவுக்கு ஆபத்து ஏற்பட்டுள்ளது.

கடந்த 2-ந் தேதியன்று கல்கத்தாவில் ஆயுதம் தாங்கிய காங்கிரஸ் இளைஞர்களும் மாணவர்களும்—மாநில அமைச்சர் மற்றும் ஒரு காங்கிரஸ் எம் பி ஆகியோர் தலைமையில் ஊர்வலமாகச் சென்று—ஜே பி பேசவிருந்த கூட்டத்தைக் கலைத்துள்ளனர். அவரது காரின் மீது ஏறி நின்று நடனம் ஆடியுள்ளனர்.

### நாம் அன்று சொன்னதை இன்று உணருகிறர்கள்

இந்தவொரு சம்பவம் போதாதா ஜனநாயகத்துக்கும் பிரஜா உரிமைகளுக்கும் எந்த அளவுக்கு ஆபத்து என்பதை எடுத்துக் கூற.மேற்கு வங்கத்தில் காங்கிரசாரின் அரைப் பாசிச அடக்கு முறைகள் பற்றி ஏற்கனவே நாம் தொடர்ந்து கூறி வந்த போதிலும் அதை அன்று நம்புவதற்குக் கூட மறுத்தவர்களும் பத்திரிகைகளும் அண்மைக் காலத்தில் அதை உணர்ந்து வருகின்றனர்.

இது எதைக் காட்டுகிறது? இந்தியாவில், ஆளும் கட்சியான காங்கிரசையோ அரசாங்கத்தின் கொள்கைகளையோ எதிர்ப்பவர்கள் யாராயிருந்தாலும் தாக்கப்படுவதும் அடக்கு முறைக்கு உள்ளாக்கப்படுவதும் நடைமுறையாக உள்ளது என்பதைத தானே. மேற்கு வங்கத்தில் மட்டும் சுமார் ஆயிரம் மார்க்சிஸ்டுகளும் ஆதரவாளர்களும் கொல்லப்பட்டுள்ளனர். 1972ல அங்கு நடந்த தேர்தலில் அதிகாரிகளும் வாக்காளர்களும் துப்பாக்கி முனையில மிரட்டப்பட்டனர், தாக்கப்பட்டனர், காங்கிரசாரால்.

அப்போது மற்ற பகுதி மக்கள் உணரவில்லை. இப்போது உணருகிறர்கள்.மேலும் மீண்டும் தான மேற்கு வங்கத்திற்குச் செல்லப் போவதாகவும், மக்களைத் திரட்டி இயக்கம் நடத்தப் போவதாகவும் அறிவித்துள்ளார். நாம பாராட்டுகிறேம்.

மொரார்ஜி தேசாயின் உண்ணாவிரத இயக்கமும், ஜெ. பி. இயக்கத்தைப் போல் ஒரு முக்கியம வாய்ந்தது என்று சொல்லலாம்.

இரு கோரிக்கைகளுக்காகவே அவரது உண்ணாவிரதம்...ஒன்று: குஜராத்தில் விரைவில தேர்தல் நடத்த வேண்டும் என்பது. இரண்டு: 'மிசா' சட்டத்தை ரத்துச் செய்ய வேண்டும் என்பது.

குஜராத்தில் தேர்தல் நடத்த வேண்டும் என்ற கோரிக்கை முக்கியமானதாகும். ஏனெனில் எங்கெங்கு தனது கட்சி வெற்றிபெற வாய்ப்பு உண்டோ அங்குதான் தேர்தல் நடத்துவது என்று முடிவு செய்துள்ளார் பிரதமர் இந்திரா. எங்கெங்கு தோல்வியைத் தழுவ நேரிடுமோ அங்கெல்லாம் தேர்தல் என்பதே இல்லை. நடத்துவதில்லை. இதுதான் இந்திராவின் சூழ்ச்சி. சதி.

எனவேதான் குஜராத்தில் தேர்தல் நடத்த மறுக்கிறர். பாண்டிச்சேரியில்தேர்தல் நடத்தவில்லை.

தேர்தல் கமிசன் அதிகாரிகளே கூறி விட்டார்கள், அரசாங்கம் என்று உத்திரவிடுகிறதோ அன்று தேர்தல் நடத்த தயாராய் இருப்பதாக, ஆனல் அரசாங்கம் உத்திரவிடத் தயாராக இல்லை. காரணம் வெற்றிவாய்ப்பு அதற்கு இல்லை.

அவ்வளவுதான். பார்த்தீர்களா, இது தான் இந்திராவின் ஜனநாயகம்

வி கே கிருஷ்ணமேனன் காலமானதால்திருவனந்தபுரம் நாடாளுமன்றத் தொகுதிக்கு தேர்தல் நடத்தி அங்கிருந்து ஓர் உறுப்பினர் நாடாளுமன்றத்துக்கு அனுப்பப்பட வேண்டும் செய்தார்களா? இல்லையே. அந்த இடத்தில் தேர்தல் நடத்தப்படவில்லை என்பது மட்டுமல்ல.

அத்தொகுதிக்கு தேர்தல் நடத்த தேதியை தேர்தல் கமிசன் அறிவித்தது.

பக்ருதீன் அலி அகமது ஜனாதிபதியானதால் அவரது தொகுதியான பார்பெட்டா தொகுதிக்கும் திருவனந்தபுரத்திற்கும் ஒரே தேதியில் உபதேர்தல் என்று அறிவித்தது. ஆனல் தேர்தல் நடந்ததோ பார்பெட்டா தொகுதியில் மட்டும்தான். திருவனந்தபுரம்தொகுதியில் நடக்கவில்லை. காரணம் என்ன?

இந்திரா அம்மையார் திருவனந்தபுரம் வந்தார். தனது கட்சிக்காரர்களைச் சந்தித்து ஆலோசனை நடத்தினர். அதில் தனது கட்சிக்கு மெஜாரிடி கிடைக்காது என்பது புலனாகியது.

நேர்மையாக தேர்தல் நடத்தினல் மட்டுமல்ல. நேர்மையற்ற முறையில் தேர்தல் நடத்தினலும் ஜெயிக்க முடியுமா என்பது சந்தேகம. எனவே தேர்தல் நடத்தவில்லை, இன்று வரை.

### பயமின்றி வாக்களிக்க உரிமை வேண்டும்

இதேமாதிரி பார்பெட்டா தொகுதிக்கு சென்றர். கலந்து ஆலோசித்தார். காங்கிரஸ் தலைவர்களுடன் பின்னர் தேர்தல் நடந்தது. நேர்மையற்ற முறைகளை ஜனநாயகத்துக்கு விரோதமான முறைகளைக் கையாண்டு தேர்தலில் ஜெயித்து விட்டார். அதெல்லாம் பத்திரிக்கைகள் வாயிலாக நீங்கள் அறிந்திருப்பீர்கள்.

எனவேதான் தேர்தல்கள் முறையாக உரிய காலத்தில் நடத்தப்பட வேண்டும் என்று வற்புறுத்துகிறேம். அதற்காகவே மொரார்ஜியும் உண்ணாவிரதம இருக்கிறர்.

உங்களுக்குத் தெரியும், மொரார்ஜிக்கும், எங்களுக்கும் மாறுபட்ட கருத்துக்கள் உள்ளன. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும், ஸ்தாபன காங்கிரஸ் கட்சிக்கும் கருத்து வேறுபாடுகள் உள்ளன. ஆனலும், அடிப்படை பிரஜா உரிமைகள் பாதிக்கப்படும்போது — பறிக்கப்படும் போது — இக்குறிப்பிட்ட பிரச்னையில் — நாங்களும், அவர்களும் ஒன்றுபட்ட இயக்கம் நடத்த முன்வந்துள்ளோம்.

தேர்தல் கூட்டு. உறவு, உடன்பாடு என்ற பேச்சுக்கே இப்போது இடமில்லை. இன்று முக்கிய கோரிக்கை, அவசர நிலை ரத்துச் செய்யப்பட வேண்டும். தேர்தல்கள் நடத்தப்பட வேண்டும். இதற்கு முதலில் உத்தரவாதம் வேண்டும் அது மட்டுமல்ல.

வாக்காளர்களை அணுகவும், வாக்கு கேட்கவும், பயமின்றி வாக்களிக்கவும் உரிமைகள் வேண்டும். தேர்தல் அதிகாரிகளின் பாதுகாப்புக்கு உத்தரவாதம் வேண்டும்.

தேர்தல் முறையாக நடந்தால் திரிபுரா, மேற்குவங்கம், கேரளம் ஆகிய மாநிலங்களில நிச்சயம் பெரும்பான்மை இடங்களில் மார்க்சிஸ்ட் கட்சி வெற்றிபெறும். வடஇந்தியாவில் இந்தி பேசக்கூடிய மாநிலங்களிலும் காங்கிரஸ் கட்சி முறியடிக்கப்படும்.

இதை இந்திராகாந்தி அம்மையாரும் புரிந்து கொண்டுதானிருக்கிறர். இத்தகையதொரு நிலை ஏற்படுவதை தவிர்க்க அவரும பல நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறர்.

அதனல்தான் 1971ல் பாகிஸ்தான் யுத்தத்தின் போது கொண்டு வரப்பட்ட அவசர நிலையை நீடித்து வருகிறர். 'மிசா' சட்டத்தையும், பாதுகாப்பு சட்டத்தையும் தொடர்ந்து அமுலில் வைத்துள்ளார். இத்துணைக்கும் மேலாக சத்ர பரிசத், இளைஞர் காங்கிரஸ் என்ற பெயரில் ஆயுதம் தரித்த குண்டர் படையைத் தயாரித்து வைத்துள்ளார்; காங்கிரஸ் கட்சியையும், அதன் அரசாங்கத்தையும் எதிர்ப்பவர்கள் யாராயிருந்தாலும் அவர்கள் மீது பலாத்காரத் தாக்குதல்கள நடத்தப்படுகின்றன.

இதை கல்கத்தாவில் ஜேபிக்கு ஏற்பட்ட அனுபவத்திலிருந்தே புரிந்து கொளளலாம்.

ஆகவே, இப்படிப்பட்ட அடக்குமுறை தாக்குதல்களை நாம் முறியடித்தாக வேண்டும். அதற்காகப் போராடக் கூடிய சக்திகளை பலப்படுத்துவதும்—கருததாலும் கரத்தாலும் பாடுபடக் கூடிய மக்களையும், விவசாயிகளையும், விவசாயத் தொழிலாளர்களையும் மாதர்களையும் திரட்டுவதும நமது கடமையாகும்.

தோழர் கே ஆர் ஞானசம்பந்தன் தலைமைவகித்தஇக்கூட்டத்தில்தோழர்கள் மாநிலச்செயலாளர் ஏ பாலசுப்ரமண்யம் மாதர்சங்கச்செயலாளர் பாப்பா உமாநாத், சி ஐ டி யூ தலைவர் கோ பாரதிமோகன் விவசாயிகள் சங்கச் செயலாளர் கோ வீரய்யன், எம் செல்லமுத்து ஆகியோர் பேசினர்.

## எஸ். எப். ஐ. க்கு மாபெரும் வெற்றி

### 55 இடங்களில் 54ஐ கைப்பற்றியது

டைமண்ட் ஹார்பர் (மே. வங்கம்) ஏப். 15—

டைமண்ட் ஹார்பரிலுள்ள ஃபர்க்கிசாங் கல்லூரியில் மாணவர் பேரவைக்கு நடந்த தேர்தலில் இந்திய மாணவர் சங்கம் (எஸ்எப்ஐ) பெரும் வெற்றி பெற்றது.

இத்தேர்தலில் எஸ்எப்ஐயின் வெற்றியை முறியடிக்க — மாணவர்களிடையே குழப்பத்தை ஏற்படுத்த 'சத்ரபரிசத்' (இந்திரா காங்கிரஸ் மாணவர் பிரிவு) மாணவர்கள் — வேட்பு மனு தாக்கல் செய்யப்பட்ட நாளிலிருந்து எவ்வளவோ முயற்சித்தும் பலனளிக்கவில்லை. எனவே இறுதியாக உள்ளூர் காங்கிரஸ்குண்டர்களுடன் சேர்ந்து மாணவர்களை மிரட்டும் பணியில் இறங்கினர். ஆனலும் முடியவில்லை.

பேரவையின் 55 உறுப்பினர்களுக்கு நடந்த தேர்தலில் 54ஐ கைப்பற்றியது எஸ் எப் ஐ. எதிர்த்துப் போட்டியிட்ட சத்ரபரிசத் படுதோல்வியைத் தழுவியது. ஒரே ஒரு இடத்தில்தான்—அதுவும் தில்லுமுல்லுசெய்து வெற்றிபெற முடிந்தது.

சத்ரபரிசத் கல்வி பாதுகாப்பு கமிட்டி, ஷாக்கா பசாவ் கமிட்டி மகாஜதி சதன் சத்ரபரிசத் முதலிய ஸ்தாபனங்கள் படுதோல்வி அடைந்தன.

எஸ் எப் ஐ வேட்பாளர் தொருண் சர்க்கார்472 வாக்குகள் பெற்று வெற்றி பெற்ற இடத்தில் காங்கிரஸ் மாணவர் 298 வாக்குகளும், ஷாக்கா பசாவ் கமிட்டி வேட்பாளர் 87 வாக்குகளும்தான் பெற்றனர்.

இந்த தேர்தல் வெற்றியை கொண்டாடும்வகையில், ஆரவாரமிக்க பெரும் ஊர்வலம் ஒனறை நடத்தினர். இந்த வெற்றியானது அப்பகுதியில் உள்ள ஜனநாயக மனப்பான்மை கொண்ட மக்களிடையே பெரும் உற்சாகத்தையும் நம்பிக்கையையும் ஊட்டியுள்ளது.

உத்திரபிரதேச

## அமைச்சர் மீது ஊழல் குற்றம்

லக்னே, ஏப். 15—

உத்திரப்பிரதேச அமைச்சர்கள் மீது ஊழல் குற்றம் சாட்டி அவர்கள் மீது விசாரணை நடத்துமாறு சங்கர்ஷ சமிதியினர் முதல் அமைச்சரிடம் மகஜா கொடுத்துள்ளனர்.

அம்மகஜரில் அம்மாநில நீர்ப்பாசன இலாகா அமைச்சர் ராஜ்மங்கல்பாண்டே மீது 26 குறிப்பிட்ட குற்றச்சாட்டுகள் விவரங்களுடன் கூறப்பட்டுள்ளன. மேலும் அவர் மீது உயர்நீதிமன்ற நீதிபதி யொருவரால் அவர் மீது விசாரணை நடத்த வேண்டும் என்றும் கோரப்பட்டுள்ளது.

அந்த அமைச்சர் மீது சாட்டப்பட்ட குற்றச்சாட்டுகளில் ஒன்று அந்த அமைச்சர் விடுதலைப் போராட்ட காலத்தில் 4 நாட்கள் மட்டும் சிறைக்குச் சென்றவர் என்பதும் ஆனல் 6 மாதங்கள் சிறையில் இருந்ததாக கள்ள தஸ்தாவேஜு தயாரித்து அதன் மூலம் 50 ஏககர் நிலத்தை வாங்கியுள்ளார் என்பதுமாகும்.

### கட்சி-தீக்கதிர் வளர்ச்சி நிதி

## கன்னிவாடியில் ரூ500 அளிக்கப்பட்டது

திண்டுக்கல், ஏப். 15—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி — 'தீக்கதிர்' நாளிதழ் வளர்ச்சி நிதிக்காக திண்டுக்கல்வட்டம் கன்னிவாடியில் ரூ 500 வழங்கப்பட்டது. கட்சியின் மாநிலச் செயலாளர் தோழர் ஏ பாலசுப்ரமண்யத்திடம் வட்டச் செயலாளர் தோழர் ஏ முனுசாமி பலத்த கரவொலிக்கிடையே இந்த நிதியை வழங்கினர்.

கடந்த 11ந் தேதியன்று ஜவகர் திடலில் நடந்த நிதியளிப்பு கூட்டத்திற்கு தோழர் எஸ் பழனியப்பன் தலைமை வகித்தார்.

தோழர்கள் என் வரதராஜன், எம் பி மணிவேல் ஆகியோரும் பேசினர்.

இக்கூட்டத்திற்கு சுரக்காய்பட்டி, வெள்ளமடத்துப்பட்டி ஆகிய ஊர்களிலிருந்து திரளானேர் கோஷங்களை முழங்கிக் கொண்டு ஊர்வலமாக நடந்தே வந்து கலந்து கொண்டனர்.

உலக மக்களின்

## மரணத்திலே மகிழ்ச்சியை உருவாக்குகிறது அமெரிக்கா

நியூயார்க், ஏப். 15—

கடந்த இரண்டு ஆண்டுகளில் அமெரிக்காவின ராணுவ ஆயுத விற்பனை என்றுமில்லாத அளவுககு அதிகரித்துள்ளது.

1974ம் ஆண்டில் மட்டும் 830 கோடி டாலர் (6340 கோடி ரூபாய்) மதிப்புள்ள ஆயுதங்கள் விற்றுள்ளது அமெரிககா.

உலகமக்களின் மரணத்திலே தங்களது மகிழ்ச்சியை உற்பத்தி செய்யும் அமெரிக்க ஆயுத உற்பத்தி முதலாளிகள் 74ல் கொள்ளை லாபம் அடைந்துள்ளனர். யுத்த விமானங்கள், டாங்குகள், ஏவுகணைகள் ஆகிய ராணுவத் தளவாடங்களை ஏராளமாக விற்பனை செய்துள்ளது அமெரிக்கா.

830 கோடி டாலர் மொத்த ஆயுத விற்பனையில் 650கோடிடாலர்(5200 கோடி ரூபாய்) மதிப்புள்ள ஆயுதங்கள் மத்தியகிழக்கு எண்ணை வளநாடுகளுககு விற்பனை செய்யப்பட்டுள்ளன.

74ம் ஆண்டின் இவ்விற்பனை 73ம் ஆண்டைவிட இரு மடங்கும்.60-ம ஆண்டைவிட 10மடங்கும் அதிகமாக இருக்கும்என கருதப்படுகிறது.

அமெரிக்க முதலாளிகளின் இக்கொள்ளை லாப விற்பனைக்கு பென்டகனில் [அமெரிக்கராணுவ தலைமையகத்தின்) உள்ள ராணுவ வெறியர்கள் புரோகர்களாக செயல்படுகின்றனர் ஆயுதம் வாங்கும நாடுகளுக்கு சிபாரிசு செய்கின்றனர். இவர்களின் புரோக்கர் வேலைகளுககு 2 சதவீத கூடுதல விலையை நிர்வாகச் செலவு என்ற பெயரில் அமெரிக்க ஆயுத விற்பனை முதலாளிகளே வாங்கி விடுகிருர்கள்.

அழிவைத் தரும் ஆயுதங்களை உற்பத்தி செய்து வரும் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளுக்குரிய சந்தை யுத்தம் தான்.

அதனல்தான் உலகில் எங்கெங்கு யுத்தத்தை ஏற்படுத்த சாத்தியமுண்டோ அங்கெல்லாம் யுத்தத்தை உருவாக்குகிறது.

### மதுரை மாநகராட்சி தொழிலாளர்களுக்கு

## அரசு அலுவலர்களுக்கு போன்று மருத்துவ வசதி

### அமைச்சர் அன்பழகனிடம் தலைவர்கள் வற்புறுத்தல்

மதுரை, ஏப். 12—

காசநோய், குஷ்டரோகம் மற்றும் இதர வியாதிகளுக்கு —இதர அரசு அலுவலாகளுக்கு அளிக்கபபடும் விடுபபு வசதிகள், சுகாதார சிற்றூழியர்களுக்கும் விஸ்தரிக்கபபட வேண்டும் என்றும், சிற்றுறாழியர்களுக்கு சென்னை மாநகராட்சியில் வழங்கப்படுவது போன்று மதுரை மாநகராட்சியிலும சம்பள விகிதம் உயர்த்தப்பட வேண்டும் என்றும்இங்கு வந்திருந்த மாநில சுகாதார அமைச்சர் அனபழகனிடம் வற்புறுத்தப்பட்டது.

கடந்த 9-ந் தேதியன்று சங்கச் செயலாளர் டி கே

(2-ம் பக்கம் பார்க்க)

**தீக்கதிர்**

# சிமெண்ட்: கறுப்பு மார்க்கெட்காரர்களின் காமதேனு

கறுப்புச் சந்தைக்காரர்களுக்கு காமதேனுவாக இருப்பது சிமிண்ட்.

அதனால்தான் அது சாதாரண ஜனங்களுக்கு குதிரைக் கொம்பாக இருக்கிறது.

இது மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் தெரியாத ஒன்றல்ல. தெரிந்தேதான் நடக்கின்றன.

ஏற்கெனவே, மக்களிடம் அன்றாடத் தேவைகளுக்கான பொருட்களை வாங்கும் சக்தி குறைந்துள்ளதால் சிமிண்டிற்கான தேவையை அவர்கள் நினைத்துப் பார்க்கக் கூட முடியவில்லை.

மேலும் சிமிண்ட் உற்பத்தியும் அதிகரித்துள்ளது.

இருந்தும் சிமிண்ட் நிர்ணயிக்கப்பட்ட விலைக்கு கிடைப்பதில்லை.

கள்ளமார்க்கெட் வியாபாரிகளும், சிமெண்ட் தொழிற்சாலை நிர்வாகங்களும் கூட்டாகவே இந்த செயற்கை பற்றாக்குறையை ஏற்படுத்துகின்றனர்.

"நிர்மாண தொழிற்சாலைகள் அளிக்கும் தகவலின்படி சிமெண்ட் தொழிலிலும் வியாபாரத்திலும் முறைகேடான நடவடிக்கைகள் நடைபெறுகின்றன. சிமெண்ட் உற்பத்தியாளர்கள் தாங்களே விற்பனை செய்ய அனுமதிக்கப்பட்ட கோட்டாவின் பெரும்பகுதியை வியாபாரிகளோடு சேர்ந்து கொண்டு கள்ளமார்க்கெட்டிற்கு விற்று விடுகிறார்கள்"

("எகானமிக் டைம்ஸ்" 13. 4. 75)

சிமிண்ட் பற்றாக்குறைக்கும் விலை உயர்வுக்கும் இதுதான் அடிப்படையான உண்மை.

கடந்த ஆண்டு சிமிண்ட் தொழிற்சாலைகள் தங்களது உற்பத்தி சக்தியில் சராசரி 70 சதவீதத்திற்கும் குறைவாகவே உபயோகப்படுத்தின.

ஆனால் இவ்வாண்டில் சமீப மாதங்களாக அத்தொழிற்சாலைகளின் சக்தியில் 75 சதவீதத்திலிருந்து 77 சதவீதம் வரை உபயோகப்படுத்தப்பட்டு உற்பத்தி செய்யப்படுகிறது.

கடந்த மார்ச் மாதத்தில் மட்டும் 13 லட்சத்து 29 ஆயிரம் டன் சிமிண்ட் இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்டுள்ளது.

இந்தியாவில் சிமெண்ட் தொழில்கள் தனியார் துறையிலும் பொதுத்துறையிலும் நடத்தப்படுகின்றன.

பொதுத்துறை சிமெண்ட் தொழில்நிர்வாகிகளுக்கும் தனியார்துறை முதலாளிகளுக்கும், கள்ளமார்க்கெட்காரர்களுக்குமிடையே 'எழுதப்படாத உடன்பாடு' இல்லாமல் கறுப்புச் சந்தையில் சிமெண்டு எப்படி விளையாட முடியும்?

இந்த லட்சணத்தில் மாதம் 1100 டன் சிமிண்ட் உற்பத்தி செய்யக்கூடிய 6 சிமிண்ட் தொழிற்சாலைகள் உற்பத்தியை ஆரம்பிக்கும் நிலையில் உள்ளதாம்.

உற்பத்தி செய்யப்பட்ட பொருட்கள் முறைபாக நிர்ணயிக்கப்பட்ட விலையில் கிடைக்காதபோது உற்பத்தியின் அர்த்தம்தான் என்ன?

உற்பத்தி பெருக்கம் என்பதுமென்மேலும் கொள்ளை லாப பெருக்கம் என்பதுதானே அர்த்தம்.

ஒருபக்கம் இப்படி—மறுபக்கம் அரசாங்கம் சிமிண்டின் நிர்ணய விலையையே கூட்டும் நிலைமை உருவாகியுள்ளது.

சிமிண்ட் உற்பத்திக்கான நிலக்கரியின் விலையை டன் ஒன்றுக்கு கிட்டத்தட்ட 22 ரூபாய் வீதம் உயர்த்த அரசாங்கம் திட்டமிட்டுள்ளது என்றும் இதனால் சிமிண்டின் விலையும் டன் ஒன்றுக்கு ரூ, 7 வீதம் அதிகரிக்க கூடும் என்றும் 'எகனமிக் டைம்ஸ்' பத்திரிகை கூறுகிறது.

சிமிண்ட் தொழில் நடத்தும் முதலாளிகளும் கொள்ளை லாபம் பெறலாம்.

அரசாங்கமும் சிமிண்ட் விலையை கூட்டிக்கொள்ளலாம்.

ஆனால் அனலிலும், வெயிலிலும் ரத்தத்தைவேர்வையாகச் சிந்தி உழைக்கும் சிமிண்ட் தொழிலாளர்கள் உயிர்வாழ சம்பள உயர்வு; ஏனைய வசதிகளையும் கேட்டால் மட்டும் இந்திரா காந்தி அரசாங்கம் அடக்குமுறைகளையும், குள்ளநரி வேலைகளையும் காட்டுகிறது.

ஒருபுறம் சிமெண்ட் தொழிலாளர்களையும்—மறுபுறம் பொதுமக்களையும் ஒட்டச் சுரண்டி, சிமெண்ட் முதலாளிகளையும் கள்ளமார்க்கெட் பேர்வழிகளையும் மேலும் மேலும் கொழுக்கவைப்பதுதான் இந்திரா அரசின் கொள்கையும் நடைமுறையுமாகும்.

இதைத்தான் நமக்கு சிமெண்ட் தெளிவுபடுத்துகிறது.

---

# பம்பாயைக் குலுக்கிய ஆதிவாசிகளின் பேரணி

## நிலவெளியேற்றத்தை எதிர்த்து

பம்பாய், ஏப். 16—

அண்மையில் மராட்டிய மாநிலத்தின் தலைநகர் பம்பாயில் அரசு அலுவலகமான மராட்டிய கவுன்சிலை நோக்கி ஆதிவாசிகளும், விவசாயத் தொழிலாளர்களும், வீட்டுப் பெண்களும், பாங்கு ஊழியர்களுமாக 18 ஆயிரம் பேர் கலந்து கொண்ட மாபெரும் ஆர்ப்பாட்ட அணிவகுப்பு நடந்தது.

இது வியக்கத்தக்கவகையில் நடைபெற்ற — வெகுஜனப் போராட்டத்தின் ஒரு முன்னேற்றமாகும்.

வலதுகம்யூனிஸ்ட் தவிர மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, சோஷலிஸ்ட் கட்சி, விவசாயிதொழிலாளி கட்சி, லால்நிஷன் கட்சி ஆகிய இடதுசாரி கட்சிகள் இந்த ஆர்ப்பாட்ட ஊர்வலத்திற்குத் தலைமைவகித்தன.

மராட்டிய மாநிலத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து வந்த ஆதிவாசிகளும் விவசாயிகளும் அந்தந்தப் பகுதிகளில் போராடுகின்ற வீட்டுப் பெண்களும் ஆர்ப்பாட்ட ஊர்வலத்தில் தீவிரமாகக் கலந்து கொண்டனர்.

### தொழிலாளி வர்க்கம்-மத்தியதர வர்க்கம் ஆதரவு

ஆதிவாசிகளுக்கு மலைப் பிரதேச நிலங்களைத் திருப்பித்தரவேண்டும்— மாதத்தில் ஓர் ஆளுக்கு ஏழு கிலோ உணவு தானியம் என்றளவில் ரேஷன் வழங்கவேண்டும்— தொழிற்சாலைகளிலும் விவசாயப் பகுதிகளிலும் குறைந்தபட்ச கூலியை அமுல்படுத்தவேண்டும் — ஆதிவாசிகளின் பிரதேசங்களிலிருந்து மாநில ரிசர்வ் போலீஸ் படையை அரசு திரும்பப்பெறவேண்டும் முதலிய கோரிக்கைகளுக்காக அவர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

விலைவாசி உயர்வுக்கு எதிராக முழக்கம் செய்து கொண்டுவந்த வீட்டுப் பெண்களின் படை வரிசைக்கு மார்க்சிஸ்ட கம்யூனிஸ்ட் கட்சியின் பம்பாய் கார்ப்பரேசன் உறுப்பினர் தோழர் அகல்யா ரங்கனேகரும், சோசலிஸ்ட் கட்சி எம். எல். ஏ. மிருணாள் கோரேயும் தலைமை வகித்தனர்.

போலீஸ் தடைச் சட்டத்தின்படி, 18 ஆயிரம் பேர் கொண்ட இந்த மாபெரும் வெகுஜன அணிவகுப்புகவுன்சில் ஹாலுக்குச் சற்றுதொலைவில் தடுத்து நிறுத்தப்பட்டது.

ஆதிவாசி மக்களின் கிராமப்புற விவசாயத்தொழிலாளர்களின் கோரிக்கைகளைவற்புறுத்தி நடைபெற்ற அவ்வூர்வலத்தில் பம்பாய் நகர தொழிலாளி வர்க்கமும் மத்தியதர வர்க்கமும் கலந்து கொண்டது உணர்ச்சிப் பூர்வமாக இருந்தது.

இப்படிப்பட்ட உணர்ச்சி பூர்வமான ஊர்வலத்தில் வலது கம்யூனிஸ்டுகள் கலந்து கொள்ளவில்லை. ஜெயப்பிரகாஷ் நாராயணன் இயக்கத்தின் பின்னால் இருக்கும் ஜனசங்கம், பாரதீய

(1ம் பத்தி பார்க்க)

(5-ம்பத்தித் தொடர்ச்சி)

லோக்தளம், காங்கிரஸ் ஆகிய பிற்போக்கு கட்சிகள் இருந்தால் கலந்து கொள்வதில்லை என கூப்பாடுபோடுவார்கள் இந்த 'பரிசுத்த வாதிகள்'. ஆனால் சமுதாயத்தின் அடித்தளத்தில் அல்லலுறும் ஆதிவாசிகளின் உரிமைக்குரல் ஆர்ப்பாட்டத்தில் ஜெயபிரகாஷ் நாராயணன இயக்கத்தின பின்னால் உள்ள அக்கட்சிகள் கலந்து கொள்ளாத இந்த ஊர்வலத்தில் வலது கம்யூனிஸ்டுகள் கலந்து கொள்ளாதது ஏனோ?

### வலது கம்யூனிஸ்டுகள் ஆதிவாசிகளை அலட்சியம் செய்ததேன்?

இப்படியொரு பிரச்னையில் கூட, ஆதிவாசி மக்களின் உரிமை பிரச்னையில் கூட இந்திரா காங்கிரசுக்கு எதிராக குரல் கொடுப்பதை வலது கம்யூனிஸ்ட் கட்சி தவிர்ப்பது ஏனோ?

(சர்க்கரை முதலாளிகளிடமிருந்து வசூலித்து மகாராஷ்டிரா முதலமைச்சரால் வலது கம்யூனிஸ்டுகளின பெருந்தலைவர் டாங்கேக்கு ஒருலட்ச ரூபாய்பண முடிப்பு கொடுக்கப்பட்டதன பிரதிபலனகவே இந்த ஊர்வலததில் வலது கம்யூனிஸ்டுகள் கலந்து கொள்ளவில்லை என்று பகிரங்கமாக அறிவிக்கவில்லை.)

இந்த ஆர்ப்பாட்டம் நடைபெற்ற அன்றே — பம்பாய்நகரத்தின் மேற்கு பகுதியிலும் கிழக்குப் பகுதியிலும் உள்ள என்ஜினீயரிங் தொழிலாளர்கள் ஒருலட்சம் பேர் ஒரு நாள் அடையாள வேலைநிறுத்தம செய்தனர்.

என்ஜினீயரிங் தொழிலாளர்களது வேலைநிறுத்தம் ஆதிவாசிகளின் அணிவகுப்புக்குதார்மீக சக்தியை அதிகரித்தது.

பல்லாயிரக்கணக்கான ஆதிவாசிகளும், விவசாயத் தொழிலாளிகளும் வீட்டுப் பெண்களும், மத்தியதரவகுப்பினரான பாங்கு ஊழியர்களும், மற்ற உழைப்பாளர்களும் ஓரணி சேர்ந்து நடத்திய இந்த உணர்ச்சிப் பிரவாகமிக்க மகத்தான பேரணி பம்பாய் நகரையே குலுக்கியது.

---

# நாடாளுமன்ற உறுப்பினர் எண்ணிக்கை உயர்வு

புதுடில்லி, ஏப். 15—

வருகிற பொதுத்தேர்தலுக்குப்பிறகு நாடாளுமன்றத்தில் தற்போது இருந்து வரும் 524 இடங்கள் 540 ஆக உயர்த்தப்படும் என மத்திய சட்ட ராஜாங்க அமைச்சர் சரோஜினி மகிஷி கூறினர். 2 நியமன உறுப்பினர்கள் இடம் இதில் அடங்காது.

மஹாராஷ்ட்ரா, மத்தியப் பிரதேசத்திற்கு மேலும் 3 இடங்கள் அதிகரிக்கப்படும். மேற்குவங்காளம், குஜராத், ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களுக்கு மேலும் 2 இடங்கள் ஒதுக்கப்படும். பீகார், ஆந்திரப்பிரதேசம், கர்னடகம், ஒரிஸ்ஸா, கேரளா, ஹரியானு ஆகியமாநிலங்களுக்கு மேலும் ஒரு இடம் ஒதுக்கப்படும்.

---

# ஆசிரியர்களுக்கு தொழிற் சங்க உரிமை வேண்டும்

## நெல்லை மாநாடு வற்புறுத்தல்

திருநெல்வேலி, ஏப். 15—

ஆசிரியர்களுக்குதொழிற் சங்க உரிமை வேண்டும் என்றும், அனைத்துப் பள்ளிகளையும் அரசுடைமையாக்க வேண்டும் என்றும், விலைவாசிகளைக் கட்டுப்படுத்த வேண்டும் என்றும், ஊதிய முடக்கச்சட்டத்தை வாபஸ் பெற வேண்டும் என்றும் இங்கு நடந்த நெல்லை வட்ட ஆசிரியர் கூட்டணியின் மாநாட்டில் வற்புறுத்தப்பட்டது.

கடந்த 12ந் தேதியன்று சங்கீதசபாவில் இந்தமாநாடு நடந்தது.

இம்மாநாட்டினை மாவட்ட ஆட்சித்தலைவர் மாதவசர்மா துவக்கிவைத்தபின், இராசகோபால் அறிக்கை சமர்ப்பித்தார். கூட்டணியின் மாநிலத் தலைவர் ஜெ. எஸ். ராஜூ, பொருளாளர் அப்துல் மஜீத், மாவட்டப்பொருளாளர் திருஞானசம்பந்தம், தலைவர் மயில்ராஜப் பெருமாள், செயலாளர் பி. முத்தையா ஆகியோர் பேசினர். இன்னிசை நிகழ்ச்சிகளும் நடந்தன.

இந்த மாநாட்டில் வழக்கறிஞர்கள் ஆர். கிருஷ்ணன, பெப்பின் ஆகியோரும் கலந்து கொண்டனர்.

மாநாட்டையொட்டி ஆயிரத்துக்கு மேற்பட்டோர் கலந்து கொண்ட பிரம்மாண்டமான ஊர்வலம் மந்திரமூர்த்தி உயர்நிலைப்பள்ளியிலிருந்துபுறப்பட்டு மாநாட்டுப்பந்தலை அடைந்தது.

### அலுவலக திறப்பு விழா

முன்னதாக திருவனந்தபுரம் ரோட்டில் ஆசிரியர் கூட்டணியின் நெல்லைவட்ட அலுவலகத்தை மயில்ராஜப் பெருமாள் தலைமையில் பி முத்தையா உற்சாக கரவொலிக்கிடையேயும் வாழ்த்து முழக்கங்களுக்கிடையேயும் திறந்து வைத்தார்.

---

# கேரளத்தில் விவசாயிகள் மீது துப்பாக்கிச் சூடு

## பெண் படுகாயம்

கொல்லம், ஏப். 16—

கேரளத்தில். காங்கிரஸ்-வலது கம்யூனிஸ்ட் அரசின் போலீஸ், போராடிய விவசாயிகளின் மீது துப்பாக்கிச் சூடு நடத்தியது. இதனல் ராதா என்னும் பெண் கடுமையான காயமுற்றர். அவர், மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார்.

இந்தக் கொடிய சம்பவம் சென்ற 13-ம் தேதியன்று நடைபெற்றது.

பெரிநாடு மணக்கயம் என்னும் இடத்தில் ஒரு நிலப்பிரபு நிலச்சீர்திருத்த சட்டத்தை மீறி ஒளித்து வைத்துள்ள உபரி நிலத்தில் விவசாயம் செய்த 500 ஏழைக்குடும்பங்களை அந்நிலத்திலிருந்து வெளியேற்றுவதற்காகவே, நிலப்பிரபுவுக்கு ஆதரவாக போலீஸ் இப்படிப்பட்ட வெறியாட்டத்தில் இறங்கியது.

800 ஏக்கர் கொண்ட உபரி நிலத்தில் ஏழை விவசாயிகள் சாகுபடி செய்திருந்தனர். அவர்களை வெளியேற்றுவதற்காக ஒருபெரும் போலீஸ் படை அவ்விடத்திற்குப் பாய்ந்து வந்தது. அங்கிருந்த கிராம விவசாயிகள் சங்கச் செயலாளரையும் பல விவசாயிகளையும் போலீசார் கைது செய்து, கண்டபடி அடித்து வதைத்தனர்.

இந்தச் சம்பவத்தைக் கேள்வியுற்ற அந்தப் பகுதி விவசாயிகள் பொங்கி எழுந்தனர்; ஆர்ப்பாட்ட ஊர்வலமாக, சம்பவம் நடந்த ஸ்தலம் நோக்கி வந்தனர். ஆர்ப்பாட்டமாக வந்தவர்கள் மீது போலீஸ் துப்பாக்கிகள் வெறிபிடித்து சீறின — எட்டு ரவுண்டுகள் சுடப்பட்டன. துப்பாக்கிச் சூட்டினல் ராதா என்பவர் படுகாயமடைந்து மருத்துவமனையில் சேர்க்கப் பட்டார்.

---

# கிளன்மார்கன் மின்வாரிய தொழிற்சங்க ஊழியர்களை பழிவாங்கும் இடமாற்றம்

கிளன்மார்கன், ஏப். 15—

கிளன்மார்கன் போன்ற பகுதிகளில் தொழிற்சங்க இயக்கதை முடக்கும் நோக்கத்தோடு, தொழிற்சங்க ஊழியர்களைப் பழிவாங்கும் முயற்சியில் அதிகாரிகள் ஈடுபட்டு வருகின்றனர்.

மின்வாரியத்தில், கட்டுமானத் திட்டம்—மேற்கு என்ற திட்டத்தின் கீழ் நடுவட்டம் நெல்லித்துறை காடம்பாறை, பரளி, பரம்பிக் குளம் ஆகிய திட்டங்கள் செயல்படுகின்றன.

### ஒரு நபருக்கு

தற்போது, பரம்பிக்குளம் திட்டத்தில் அதிக வேலைகள் இல்லாததால், அதிகவேலைகள் உள்ள கிளன்மார்கன், பரளி ஆகிய பகுதிகளுக்கு தொழிலாளர்கள் மாற்றப்படுகிறார்கள்.

ஒவ்வொரு தொழிலாளிக்கும் ரூ. 500 மின்வாரிய பணம் செலவாகிறது என்றாலும்—இந்த மாற்றம் நியாயமும் அத்தியாவசியமும் ஆகும் என்று கருதப்படுகிறது.

ஆனல், இங்குள்ள—அதிகாரிகள் அத்துடன் நில்லாமல்—வேலைகள் அதிகமுள்ள கிளன்மார்கன் பகுதியிலிருந்து வேலைகள் இல்லாத பகுதிகளுக்கு தொழிற்சங்க முன்னணி ஊழியர்களை மாற்றம் செய்கிறார்களாம்.

### ரூ 500 செலவு இட்டதே சட்டமாம்

தொழிற்சங்க இயக்கத்தை முடக்கும் நோக்கத்துடனேயே மின்வாரிய பணத்தினை வீண் விரையம் செய்து அதிகாரிகள் தங்களது பழிவாங்கும் நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறார்களாம்.

இது சம்பந்தமாக கேட்டால் 'நான் இட்டதே சட்டம்' என்ற முறையில் எதேச்சாதிகாரமாக பதில் கூறுகிறார்களாம்.

மின்வெட்டு என்றும் பணமில்லை என்றும் வாரியமும் அரசும் ஒப்பாரி வைக்கின்ற இச்சமயத்தில் பல ஆயிரம் ரூபாய்களை விரையம் செய்யும் அதிகாரி மீது நடவடிக்கை எடுக்கும்படி தொழிலாளர்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டுள்ளார்கள்.

---

பேரமைப்பு ஊர்வலங்கள்:

# தி.மு.க. அரசின் பழிவாங்கலுக்கு கண்டனம்

திண்டுக்கல், ஏப்.15—

தமிழ்நாடு அரசு ஊழியர்—ஆசிரியர் —உள்ளாட்சித் துறை ஊழியர்களது பேரமைப்பின் திண்டுக்கல், வேடசந்தூர் கிளைகளின் சார்பில் கடந்த 5ந்தேதியன்று ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடந்தது.

இங்கு திண்டுக்கல் துணைக்கலெக்டர் அலுவலகத்திலிருந்து ஊர்வலம்புறப்பட்டு தாலுகா அலுவலகத்தை அடைந்தது. இதில் இவ்விரு தாலுகாக்களையும் சார்ந்த ஆசிரியர்களும் ஊழியர்களும் திரளாகக் கலந்து கொண்டனர்.

பொதுக்கூட்டத்திற்கு தாலுகா பேரமைப்பு உறுப்பினர் சாமுவேல் ராஜமாணிக்கம் தலைமை வகித்தார்.

வேடசந்தூர் கிளை அமைப்பாளர் முத்துப்பெருமாள் வரவேற்புரை நிகழ்த்தினர்.

பி சுப்பையா, ஏ சுப்பையா, எம் பால்ராஜ், நடராஜன், கே முகமதுஉசேன் பி தங்கவேல், என் மீனுட்சி சுந்தரம், மற்றும் சகோதரச் சங்கங்களைச்சேர்ந்த இ எஸ் சுந்தரம்(மின்வாரியம்) ஆர் நாராயணன்(எல் ஐ சி)சிறப்புரையாற்றினர்.

பேரமைப்பின் 6 அம்ச கோரிக்கைகளை வற்புறுத்தியும், ஆர் ஏ கூடலிங்கம சஸ்பெண்ட் செய்யப்பட்டதைக் கண்டித்தும், பேரமைப்பின் சென்னை மாவட்ட அமைப்பாளர் தே இலட்சுமணனை பழிவாங்கும் நோக்கோடு சென்னையிலிருந்து தர்மபுரிக்கு மாற்றியுள்ளதைக் கண்டித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

---

# மருந்துவ வசதி...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

முரளீதரன், முன்னாள் மாநகராட்சி உறுப்பினர் வெ. வீரபத்திரன் ஆகியோர் அமைச்சரை சந்தித்து சிற்றூழியர்களின் கோரிக்கைகளை வற்புறுத்தும் மகஜர் அளித்து பேசினர்.

மற்றும் கொசு ஒழிப்புத் திட்ட ஊழியர்களுக்கு, சிற்றூழியர்களுக்கு வழங்கப்படுவதுபோல் சம்பளம்வழங் வேண்டும் என்றும், 8-2-74க்கு முன்னதாக உள்ள எல்லா சர்வீஸ்களையும் கணக்கில் எடுத்துக் கொண்டு பென்சன், கிராஜூவட்டி வழங்க வேண்டும் என்றும்,

வேலை தேடித்தரும்நிலையத்தின் மூலமாக பதில் சுகாதார சிற்றூழியர்கள் தேர்வு செய்யப்பட வேண்டும் என்றுள்ள சுகாதாரத்துறையின் உத்திரவிற்கு விலக்களிக்கும்படி கோரிய மாநகராட்சி மாமன்றத் தீர்மானத்தை ஏற்க இயலாது என்று ஊரக உள்ளாட்சித் துறையின் குறிப்பாணையில் தெரிவிக்கபட்டுள்ளதைமறுபரிசீலனை செய்யக்கோரியும் வற்புறுத்தப்பட்டிருந்தது.

---

# சி. ஐ. டி. யூ. தோழர்களின் கவனத்திற்கு

# சி. ஐ. டி. யூ.வின் 3-வது மாநாடு

சி ஐ டி யூ வின் 3-வது மாநாடு மே 21-லிருந்து 25 வரை பம்பாயில நடைபெறும். மாநாடு மே 21-ந் தேதி மதியம் 12 மணிக்கு ஆரம்பமாகும்.

கீழ்காண்பவை மாநாடு நடைபெறுவதற்கான முறைப்படுத்தப்பட்ட அஜெண்டாவாகும்.

1. வரவேற்புக் கமிட்டி தலைவரின் உரை.
2. தோழர் பி டி ரணதிவேயின் தலைமை உரை
3. தோழர் பி ராமமூர்த்தியின் பொது அறிக்கை
4. ஸ்தாபனத்தின் மீதும், சி ஐ டி யூ நடவடிக்கைகளின் மீதும் அறிக்கை.
5. தணிக்கை செய்யப்பட்ட 1973-74-ம் ஆண்டிற்கான கணக்குகளை அங்கீகரித்தல்.
6. தீர்மானங்கள்
7. புதிய பொதுக் கவுன்சிலும், நிர்வாகிகளும் தேர்ந்தெடுத்தல்.
8. தலைவரின் அனுமதியுடன் வேறு ஏதாவது விஷயங்கள்.

சி ஐ டி யூ விதியின் 8-வது பிரிவின்படி சங்கங்கள் தங்களுடைய பிரதிநிதிகளை அனுப்ப உரிமையுடையன. அதாவது சி ஐ டி யூ வின் பொது மாநாட்டிற்கோ அல்லது விசேஷ மாநாட்டிற்கோ சி ஐ டி யூ வோடு இணைக்கப்பட்ட சங்கங்கள் கீழ்காணும் அடிப்படையில் தங்களுடைய பிரதிநிதிகளை அனுப்பலாம்.

300 உறுப்பினர்களோ அல்லது அதற்குக் குறைவான உறுப்பினர்களையோ கொண்ட சங்கம் ஒரு பிரதிநிதியை அனுப்பலாம். அதற்குமேல் கூடுதலாக இருக்கக் கூடிய ஒவ்வொரு 300 உறுப்பினர்களுக்கும் ஒவ்வொரு பிரதிநிதி வீதம் அனுப்பலாம், அல்லது 300 உறுப்பினர்களுக்கு மேல் கூடுதலாக 150-க்கு மேல் உறுப்பினர்கள் இருந்தால் ஒரு பிரதிநிதியை கூடுதலாக அனுப்பலாம்.

சி ஐ டி யூ வின் செயல் கமிட்டி தீர்மானித்தபடி பிரதிநிதி கட்டணமாக ரூ 5 வசூலிக்கப்படும். மாநாட்டில் கலந்து கொள்ள சி ஐ டி யூ வோடு இணைக்கப்பட்ட சங்கங்களில் இருந்து பார்வையாளர்கள் அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

புதிய இணைப்புகளுக்கான விண்ணப்பங்கள் சி ஐ டி யூ வின் மையத்துக்கு ஏப்ரல் 30க்குள் கிடைக்க வேண்டும். சி ஐ டி யூ வின் மைய அலுவலகம் மே 11 முதல் பம்பாயிலிருந்து செயல்பட ஆரம்பிக்கும்.

மாநாட்டை வெற்றிகரமாக நடத்த சி ஐ டி யூ வின் மகாராஷ்டிர மாநிலக் கமிட்டி ஒரு வரவேற்புக் கமிட்டியை அமைத்திருக்கிறது. பிரதிநிதிகளின் உணவுக்கும், வசதிக்கும் ஒவ்வொரு பிரதிநிதியிடமிருந்தும் ரூ 50 வசூலிக்க தீர்மானித்துள்ளது. பிரதிநிதிகளின் கேம்ப்களில் தங்கும அனைவரிடமும் உணவுக்கான கட்டணம் என்பது கட்டாயமாகும்.

பம்பாயிலிருந்து திரும்புவதற்கானடிக்கட்டுகளை ரிசர்வ் செய்ய விரும்பும் தோழர்கள், தேவையான பிரயாணக் கட்டணத்தையும், ரிசர்வ் செய்வதற்கான சார்ஜையும், ரிசர்வேஷனுக்கான விபரங்களோடு ரிசர்வேஷனை உறுதி செய்வதற்கு ஏப்ரல் 20-க்குள் அனுப்ப வேண்டும்.

வரவேற்புக் கமிட்டியின் முகவரி :—

Comrade P K Kurane,
Secretary, Reception committee,
Third Session of the C I T U,
Janashakti,
Globe mill Passage,
WORLI, Bombay-400013.

---

திண்டுக்கல்லிலிருந்து பம்பாய்

# சி. ஐ. டி. யூ. மாநாட்டுக்கு பஸ்

திண்டுக்கல், ஏப். 5—

பம்பாயில் மேமாதத்தில் நடக்கின்ற சிஐடியூ அகில இந்திய மாநாட்டுக்கு திண்டுக்கல்லிலிருந்து மே 21-ந் தேதி பஸ் புறப்படுகிறது.

இதற்கான ஏற்பாடுகளை தோழர் எம். எஸ். ஜெர்மனி கவனித்து வருகிறார்.

---



இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு, மதுரை, 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.